உ

முருகா

ஸ்ரீ அருணகிரிநாதர் அருளிய

திருவண்ணமலை திருப்புகழில்

# சில பாடல்கள்



அன்பளிப்பு:

K. பாலு ரெட்டியார்,

மண்டி, திருவண்ணமலை.

உ

முருகா

ஸ்ரீ அருணகிரிநாதர் அருளிய

திருவண்ணாமலைத் திருப்புகழில்

# சில பாடல்கள்

---




அன்பளிப்பு:

**K. பாலு ரெட்டியார்,**

மண்டி, திருவண்ணாமலை.

உ

# முன்னுரை.

சிவ தத்துவமும், சக்தி தத்துவமும் இணைந்து நின்று தொழில்படும் நிலையே முருகன் சிவபெருமானுடைய ஐந்து முகங்களும் சக்தியினுடைய திருமுகம் ஒன்றும் சேர்ந்து அறுமுகப் பெருமான் ஆகின்ருன்.

---

முருகன், தமிழ் நாட்டின் தனிப்பெருந் தெய்வம், தொல்காப்பியர் காலத்துக்கு முன்னும் தமிழ் நாட்டில் முருகன் வழிபாடு காணக் கிடைப்பதாக அறிஞர்களின் கருத்து.

முருகன் வழிபாட்டில் சமய வேறுபாடுகள் இடம் பெறுவதில்லை. சைவம், வைணவம், சாக்தம் காணுபத்யம் ஆகியவை உறவுமுறையுடன் இடம் பெறுகின்றன.

முருகன். 'இகபர சௌபாக்யம்' அருள்பவன். சகல செல்வ யோகம் மிக்க பெறுவாழ்வு அளிப்பவன் இதற்குமேல் ஜீவர்களாகிய நமக்கு வேறு என்ன வேண்டும்?

**"முருகா என உனேஓதும் தவத்தினர் மூதுலகில்**
**அருகாத செல்வம் அடைவார்; வியாதி அடைந்துநையார்;**
**ஒருகாலம் துன்பம் எய்தார்; பரகதி உற்றிடுவார்;**
**பொருகாலன் நாடு புகார்;"**

என்று திருப்போரூர் சிதம்பர ஸ்வாமிகள் அருளியுள்ளார்.

முருகனை வழிபடுவதற்கு இலக்கியத்தில், இசையில் பாண்டித்யம் பெற்றிருக்கவேண்டுமென்பதில்லை. முத்தமிழால் வைதாரையும் வாழவைப்போன் முருகன். தமிழில் முருகனுக்கு அவ்வளவு விருப்பம்.

முருகன் வழிபாட்டிற்குரிய பாக்களில் ஸ்ரீ அருணகிரிநாதர் இயற்றிய பாக்கள் சிறந்தன. அவற்றில் ஸ்ரீ அருணகிரிநாதருக்கு அறுமுகப் பெருமான் திருக்கோலங்காட்டி ஆட்கொண்டருளிய திருவண்ணுமலைத் தலம் பற்றிய திருப்புகழ் பாக்கள் இங்கு தனியாக எடுத்துப் பாராயணத்துக்குரியவகையில் பிரசுரிக்கப் பெற்றுள்ளன.

அன்பர் திருவண்ணுமலை மண்டி, **K. பாலு ரெட்டியார்** அவர்கள் தினந்தோறும் தவருமல் பாராயணம் செய்து இன்பம் பெற்றவர், 'தான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்' என்ற விருப்புடன் இத்தகைய வெளியீடுகள் பல வெளியிட்டு வழங்கிவருகின்ருர்.

அவர்தம் தன்னலம் சிறிதுமில்லாத பெருவிருப்பம் நிறைவேற முழுமுதற் பொருளாம் முருகப் பெருமான் அருள் புரிவாஞக!

ஈசான்யமடம்,
திருவருணை.

**இராம்.**

உ

கணபதி துணை.

முருகர் துணை.

## விநாயகர் துதி.

கைத்தல நிறைகனி அப்பமொடு அவல்பொரி
கப்பிய கரிமுகன் — அடிபேணி
கற்றிடும் அடியவர் புத்தியில் உறைபவ
கற்பக எனவினை — கடிதேகும்
மத்தமு மதியமும் வைத்திடும் அரன்மகன்
மற்பொரு திரள்புய — மதயானை
மத்தள வயிறனை உத்தமி புதல்வனை
மட்டவிழ் மலர்கொடு — பணிவேனே
முத்தமிழ் அடைவினை முற்படு கிரிதனில்
முற்பட எழுதிய — முதல்வோனே
முப்புரம் எரிசெய்த அச்சிவன் உறைரதம்
அச்சது பொடிசெய்த — அதிதீரா
அத்துயர் அதுகெட சுப்பிர மணிபடும்
அப்புனம் அதன்இடை — இபமாகி
அக்குற மகளுடன் அச்சிறு முருகனை
அக்கண மணமருள் — பெருமாளே

## திருவண்ணாமலைத் திருப்புகழ்.

குமர குருபர குணதர நிசிசர
திமிர தினகர சரவண பவகிரி
குமரி சுதபகி ரதிசுத சுரபதி — குலமானுங்

குறவர் சிறுமியு மருவிய திரள்புய
முருக சரணென உருகுதல் சிறிதுமில்
கொடிய வினையனை அவலனை அசடனை
— அதிமோகக்

கமரில் விழவிடு மழகுடை அரிவையர்
களவி னெடுபொரு ளளவள வருளிய
கலவி அளறிடை துவளுறும் வெளிறனை
— இனிதாகக்

கருணை அடியரொடு அருணையில் ஒருவிசை
கருதி புடைதர வருமிகு பரிபுர
கமல மலர்அடி கனவிலு நனவிலு
— மறவேனே



தமர மிகுதிரை எறிவளை கடல்குடல்
மறுகி அலைபட விடநதி உமிழ்வன
சமுக முககண பணபணி பதிநெடு — வடமாகச்

சகல உலகமு நிலைபெற நிறுவிய
கனக கிரிதிரி தரவெகு கரமலர்
தளர வினியதொர் அமுதினை ஒருதனி
— கடையாநின்று

அமரர் பசிகெட வுதவிய க்ருபைமுகில்
அகில புவனமும் அளவிடு குறியவன்
அளவு நெடியவன் அளவிட அரியவன்
— மருகோனே

அரவு புனைதரு புநிதரும் வழிபட
மழலை மொழிகொடு தெளிதர வொளிதிகழ்
அறிவை அறிவது பொருளென அருளிய
— பெருமாளே

---

கயல்விழித் தேன்எனைச் செயல்அழித் தாய்எனக்
கணவகெட் டேன்எனப் — பெறுமாது

கருதுபுத் ராவெனப் புதல்வர்அப் பாவெனக்
கதறிடப் பாடையிற் — றலைமீதே

பயில்குலத் தார்அழப் பழையநட் பார்அழப்
பறைகள்கொட் டாவரச் — சமனும்

பரியகைப் பாசம்விட் டெறியும்அப் போதுஎனைப்
பரிகரித்து ஆவியைத் — தரவேணும்

அயிலறச் சேவல்கைக் கினிதரத் தோகையுற்று
அருணையிற் கோபுரத் — துறைவோனே

அமரரத் தாசிறுக் குமரிமுத் தாசிவத்து
அரியசொற் பாவலர்க்கு — எளியோனே

புயவிணைப் பாறுசொற் சயிலமொய்ச் சாரலிற்
புனமறப் பாவையைப் — புணர்வோனே

பொடிபடப் பூதரத் தொடுகடற் சூரனைப்
பொருமுழுச் சேவகப் — பெருமாளே



கறுவுமிக் காவியைக் கலகுமக் காலனைத்
திலகுகட் சேல்களிப் — புடனாடக்

கருதிமுற் பாடுகட் டளையுடற் பேசியுட்
களவினிற் காசினுக் — குறவாலுற்

றுறுமலர்ப் பாயவிற் றுயர்வினைத் தூடலுற்
றுயர்பொருட் கோதியுட் — பகுமாதர்

ஒறுவினைக் கேயுளத் தறிவுகெட் டேனுயிர்ப்
புணையிணைத் தாள்தனைத் — தொழுவேனோ

மறையெடுத் தோதிவச் சிரமெடுத் தானுமைச்
செறிதிருக் கோலமுற்று — அணைவானும்

மறைகள்புக் காரெனக் குவடுநெட் டாழிவற்
றிடவடற் சூரனைப் — பொரும்வேலா

அறிவுடைத் தாருமற் றுடனுனைப் பாடலுற்
றருணையிற் கோபுரத்து — உறைவோனே

அடவியிற் றேகைபொற் றடமுலைக் காசையுற்
றயருமச் சேவகப் — பெருமாளே

பரியகைப் பாசம்விட் டெறியுமக் காலனுட்
பயனுயிர்ப் போயகப் — படமோகப்

படியிற்உற் ருர்எனப் பவர்கள்பற் ருவடற்
படரெரிக் கூடுவிட்டு — அலைநீரிற்

பிரியுமிப் பாதகப் பிறவியுற் றேமிகப்
பணிகளுக் கேயிளைத்து — உழல்நாயேன்

பிழைபொறுத் தாயெனப் பழுதறுத் தாளெனப்
பிரியமுற் ருேதிடப் — பெறுவேனே

கரியமெய்க் கோலமுற் றரியினற் ருமரைக்
கமைவபற் ருசையைக் — கழலோர்முன்

கலைவகுத் தோதிவெற் பதுதுளைத் தோனிதிற்
கடவுள்செச் சேவல்கைக் — கொடியோன்என்று

அரியநற் பாடலைத் தெரியுமுற் ருேர்கிளைக்கு
அருணையில் கோபுரத்து — உறைவோனே

அடவியிற் ருேகைபொற் றடமுலக் காசையுற்று
அயரும்அச் சேவகப் — பெருமாளே



தருணமணி வானி லத்தி லருணமணி யால விட்ட
தழலமளி மீதெ ரிக்கு — நிலவாலே

தலமைதவி ராம னத்தி னிலைமையறி யாதெ திர்த்த
தறுகண்மத வேள்தொ டுத்த — கணையாலே

வருணமட மாதர் கற்ற வசையின்மிகை பேத முற்று
மருவுமென தாவி சற்றும் — அழியாதே

மகுடமணி வாரி சைக்கும் விகடமது லாவு சித்ர
மயிலின்மிசை ஏறி நித்தம் — வரவேணும்

கருணையக லாவி ழிச்சி களபமழி யாமு லைச்சி
கலைவிதொலை யாமறத்தி — மணவாளா

கடுவுடைய ராநி ரைத்த சடிலமுடி மீது வைத்த
கடியமல ராத ரித்த — கழல்வீரா

அருணமணி யால மைத்த கிரணமணி சூழும் வெற்றி
அருணைநகர் கோபுரத்தில் — உறைவோனே

அசுரர்குலம் வேர றுத்து வடவனலை மீதெ முப்பி
அமரர்சிறை மீள விட்ட — பெருமாளே

முழுகிவிட வாமு கத்தின் எழுகனலி லேபி றக்கும்
முழுமதிநி லாவி னுக்கும் — வசையாலும்

மொழியுமட மாத ருக்கு மினியதனி வேயி சைக்கும்
முதியமத ராஜ னுக்கும் — அழியாதே

புழுகுதிகழ் நீப மத்தி லழகியகு ராநிரைத்த
புதுமையினில் ஆறி ரட்டி — புயமீதே

புணரும்வகை தானினைத்த துணரும்வகை நீல சித்ர
பெருமயிலி லேறி நித்தம் — வரவேணும்

எழுமகர வாவி சுற்று பொழிலருணை மாந கர்க்குள்
எழுதரிய கோபுரத்தில் — உறைவோனே

இடைதுவள வேடு வச்சி படமசைய வேக னத்த
இளமுலைவி டாத சித்ர — மணிமார்பா

செழுமகுட நாக மொய்த்த ஒழுகுபுனல் வேணி வைத்த
சிவனைமுத லோதுவித்த — குருநாதா

திசைமுகன்மு ராரி மற்றும் அரிய பல தேவ ருற்ற
சிறையடைய மீள விட்ட — பெருமாளே



ஆலவிழி நீலத் தால்அதர பானத்
தால்அளக மாரக் — கொண்டலாலே

ஆரநகை யால்விற் போர்நுதவி னுல்வித்
தாரநடை யால்நற் — கொங்கையாலே

சாலமய லாகிக் காலதிரி சூலத்
தாலிறுகு பாசத் — துன்பமூழ்கித்

தாழ்விலுயிர் வீழ்பட் டுழ்வினைவி டாமற்
சாவதன்முன் ஏவற் — கொண்டிடாயோ

சோலைதரு கானிற் கோலமற மானைத்
தோளிலுற வாகக் — கொண்டவாழ்வே

சோதிமுரு காநித் தாபழைய ஞானச்
சோணகிரி வீதிக் — கந்தவேளே

பாலக்க லாபக் கோமளம யூரப்
பாகவுமை பாகத் — தன்குமாரா

பாதமலர் மீதிற் போதமலர் தூவிப்
பாடுமவர் தோழத் — தம்பிரானே

பேதகவி ரோதத் தோதகவி நோதப்
பேதையர்கு லாவைக் — கண்டுமாலின்
பேதைமைய ருமற் றேதமக லாமல்
பேதவுடல் பேணித் — தென்படாதே
சாதகவி காரச் சாதலவை போகத்
தாழ்விலுயி ராகச் — சிந்தையாலுன்
தாளரவடி வேலைச் சேவல்தனை ஏனற்
சாரல்மற மானைச் — சிந்தியேனே
போதகம பூரப் போதகக டாமற்
போதருணை வீதிக் — கந்தவேளே
போதகக லாபக் கோதைமுது வானிற்
போனசிறை மீளச் — சென்றவேலா
பாதகப தாதிச் சூரன்முதல் வீழப்
பாருலகு வாழக் — கண்டகோவே
பாதமலர் மீதிற் போதமலர் தூவிப்
பாடுமவர் தோழத் — தம்பிரானே



இடமடு சுறவை முடுகிய மகர
மெறிகட லிடையெழு — திங்களாலே
இருவினை மகளிர் மருவிய தெருவில்
எரியென வருசிறு — தென்றலாலே
தடநடு வுடைய கடிபடு கொடிய
சரம்விடு தறுகண் — அனங்கனாலே
சரிவளை கழல மயல்கொளு மரிவை
தனிமலர் அணையில் — நலங்கலாமோ
வடகுல சயில நெடுவுடல் அசுரர்
மணிமுடி சிதற — எறிந்தவேலா
மறமகள் அமுத புளகித களப
வளரிள முலையை — மணந்தமார்பா
அடலணி விகட மரகத மயிலில்
அழகுடன் அருணையில் — நின்றகோவே
அருமறை விததி முறைமுறை பகரும்
அரியர பிரமர்கள் — தம்பிரானே

இரவியு மதியுந் தெரிவுற எழுமம்
புவிதனில் இனமொன்று — இடிமாதும்
எழில்புதல் வருநின்று அழுதுள முருகும்
இடர்கொடு நடலம் — பலகூறக்
கருகிய உருவங் கொடுகனல் விழிகொண்டு
உயிரினை நமனுங் — கருதாமுன்
கலைகொடு பலதுன் பமும்அக லிடநின்
கழலிணை கருதும் — படிபாராய்
திருமரு வியதிண் புயன்அயன் விரியெண்
டிசைகிடு கிடவந் — திடுசூரன்
திணிபுய மதுசிந் திடவலை கடலஞ்
சிடவலி யொடுகன் — றிடும்வேலா
அருமறை யவரந் தரமுறை பரவன்
புடையவர் உயவன்று — அறமேவும்
அரிவையும் ஒருபங் கிடமுடை யவர்தங்கு
அருணையில் உறையும் — பெருமாளே



விரகொடு வளைசங் கடமது தருவெம்
பிணிகொடு விழிவெங் — கனல்போல
வெறிகொடு சமனின் றுயிர்கொளு நெறியின்று
எனவிதி வழிவந் — திடுபோதிற்
கரவட மதுபொங் கிடுமன மொடுமங்
கையர்உற வினர்கண் — புனல்பாயுங்
கலகமும் வருமுன் குலவினை களையுங்
கழல்தொழும் இயல்தந்து — அருள்வாயே
பரவிடு மவர்சிந் தையர்விட முமிழும்
படவர வணைகண் — குயில்மாலம்
பழமறை மொழிபங் கயனிமை யவர்தம்
பயமற விடமுண்டு — எருதேறி
அரவொடு மதியம் பொதிசடை மிசைகங்
கையுமுற அனவங் — கையில்மேவ
அரிவையும் ஒருபங் கிடமுடை யவர்தங்கு
அருணையில் மருவும் — பெருமாளே

கஜநடை கடவார் வசமதி லுருகா
கிலெசம துறபாழ் — வினையாலே
கெதிபெற நினையா துதிதனை அறியா
கெடுசுக மதிவாழ் — மதியாலே
தசையது மருவீ வசையுட லுடனே
தரணியில் மிகவே — உலைவேனோ
சததள மலர்வார் புனைநின கழலார்
தருநிழல் புகவே — தருவாயே
திசைமுத வனைநீள் சிறையுற விடுவாய்
திருநெடு கருமால் — மருகோனே
திரிபுர தகனு ரிடமதில் மகிழ்வார்
திரிபுரை அருள்சீர் — முருகோனே
நிசிசர ருறைமா கிரியிரு பிளவா
நிறையயில் முடுகா — விடுவோனே
நிலமிசை புகழார் தலமெனு மருணை
நெடுமதில் வடசார் — பெருமானே



இடருக் கிடராகிய கொடுமைக் கனைமேல்வரு
மிறுதிச் சிறுகால்வரு — மதனாலே
இயலைத் தருகானக முயலைத் தருமேனியில்
எரியைத் தருமாமதி — நிலவாலே
தொடரக் கொடுவாதையி லடையக் கரைமேலலை
தொலையத் தலைவீசிய — கடலாலே
துணையற் றணிபூமலர் அணையிற் றனியேனுயிர்
துவளத் தகுமோதுயர் — தொலையாதோ
வடபொற் குலமேருவின் முடுகிப் பொருசூரனை
மடியச் சுடவேவிய — வடிவேலா
மறவக் குலமாமொரு குறமெய்த் திருமாமகள்
மகிழப் புனமேவிய — மயில்வீரா
அடரப் படர்கேதகை மடலிற் றழைசேர்வயல்
அருணைத் திருவீதியில் — உறைவோனே
அவனித் திருமாதொடு சிவனுக் கிமையாவிழி
அமரர்க் கரசாகிய — பெருமானே

இமராஜனி லாவ தெரிக்குங் — கனலாலே
இளவாடையு மூறு மொறுக்கும் — படியாலே

சமராடிய மார நெடுக்குங் — கணையாலே
தனிமானுயிர் சோரு மதற்கொன் — றருள்வாயே

குமராமுரு காச டிலத்தன் — குருநாதா
குறமாமக ளாசை தணிக்குந் — திருமார்பா

அமராவதி வாழ்அம ரர்க்கன்று — அருள்வோனே
அருணபுரி வீதியி னிற்கும் — பெருமாளே

ஆறிரு தடந்தோள் வாழ்க ;
அறுமுகம் வாழ்க ; வெற்பைக்
கூறுசெய் தனிவேல் வாழ்க ;
குக்குடம் வாழ்க ; செவ்வேள்
ஏறிய மஞ்ஞை வாழ்க ;
யானைதன் அணங்கு வாழ்க ;
மாறிலா வள்ளி வாழ்க ;
வாழ்கசீர் அடியார் எல்லாம் ;
முருகக் கடவுள் திருவடிகளே சரணம்.



வெளியீடு : 5



15—8—60 ல்

திருவண்ணாமலையில் நடைபெறும்

# ஸ்ரீ அருணகிரிநாத ஸ்வாமிகள்

ஆறுவது ஆண்டு விழா

நினைவு மலராக வெளியிடப்பட்டது.



சுதந்திரதேவி பிரஸ், திருவண்ணாமலை.